உ

செந்திலாண்டவன்

திருவடி துணை.

---

# சுப்ரமண்யர் தோத்திரக்கொத்து.

இது

திரிசிரபுரம்

பிரஹ்மஸ்ரீ திரு. அ. சிவாநந்த சாகர யோகீசர்

ஜேஷ்ட குமாரத்தியாகிய

திரு. பாலஸரஸ்வதி தேவகுஞ்சரியம்மாள்

இயற்றியது.

[இரண்டாம் பதிப்பு.]

ஸ்ரீ பாலசுப்ரமண்யம் கம்பெனி,
திருவல்லிக்கேணி, சென்னை.

ரை-] ரேபர் விலை. 0-3-0
கலிகோ பைண்டு. 0-5-0



Printed by

*Sri Balasubrahmanyam & Co.,*

Triplicane.

at the

*"Sacchidhanandham Press"*

Komaleeswarnpet, Madras.



திரு. அ. சிவாநந்த சாகர யோகீசரது

பிரதம மாணாக்கராகிய

தஞ்சை, செண்ட்பீடர்ஸ் காலேஜ்

தமிழ் பண்டிதர்

ஆ. சேதுராம பாரதியார் அவர்கள்

இயற்றிய

சாற்றுக் கவி.



திருவளரும் புவனமுழு தீன்றகுற மான்றெய்வச் செல்வி யோடும், அருள்பரவச் செந்திலமர் முருகனிரு தாண்மலருக் கன்பா லின்பம், பெருகவவ னடியவர்நாத் தித்திக்க மூப்போ தும் பேசி நெஞ்சம், உருகவொரு தமிழ்ப்பதிக மாலைபுனந் தின்பமெலா மொருங்குற் றூரால்.

கருணைபொழி சரவணப வாநந்த சற்குருசீர்க் கமலப் பொற்று, ளரணமெனச் சார்ந்துபல கலையுணர்ந்து மெய்ஞ் ஞான வமுத மார்ந்த, தெருள்பெறு சிவாநந்த சாகரயோ கீசர் தவஞ் செய்து பெற்ற, வரகவிமங் களவல்லி தெய்வகுஞ் சரிபதும மாதன் னூரே.



செந்திலாண்டவன்
திருவடி துணை.

# முகவுரை.

1904 வருஷம் ஆகஸ்ட் மாசத்தில் எனக்கு ஒருவகையான சுரநோய் கண்டது. அது சுதேச வைத்தியராலும், ஆங்கில வைத்தியத்தில் தேர்ந்த சில இந்து டாக்டர்களாலும் சௌக்கியம் பண்ண முடியாமற்போயிற்று. அவர்கள் கொடுத்த ஔஷதங்களெல்லாம் ஜ்வாலித்தெரியும் அக்நியிற் பெய்த நெய்போலாகி வியாதியை வளர்த்ததும் தவிர வேறு பல நோய்களை உற்பத்தி செய்து பயனற்றுப் போயின. அது கண்ட என் பிதாவாகிய திரு. அ. சிவாநந்தசாகரயோகீசர், இது நமது குலதெய்வமாகிய சுப்பிரமண்யக் கடவுளின் கிருபையாலன்றித் தீராதென்று கூறிச், செந்தமிழ்ப் பாமாலைகளால் வழிபடு தெய்வத்தைத் துதிக்கும்படி கட்டளையிட்டார். அந்தக்கட்டளையைச் சிரமேற்கொண்டு ஒருநாளைக்கொரு பதிகமாகப் பத்துநாளிற் பத்துப்பதிகங்களைப் பாடி ஆண்டவனைத் துதித்தேன். பாடவே நாளுக்குநாள் வியாதி குணப்பட்டு யாவரும் வியக்கும்படி இரண்டு வாரத்தில் நோய் தீர்ந்து சௌக்கியமடைந்தேன். இப்பதிகங்களிற் குற்றங்குறைகளுளவேனும் கல்வி கேள்விகளிற் சிறந்த பெரியோர் பொறுத்தருள்வரென்னுங் கருத்தினால் இவற்றை வெளியிடத் துணிவுகொண்டேன்.

இங்ஙனம்

திரு. பாலஸரஸ்வதி தேவகுஞ்சரியம்மாள்.

உ

செந்திலாண்டவன்

திருவடி துணை.

# சுப்ரமண்யர் தோத்திரக்கொத்து.

## காப்பு

செந்தின்முரு கேசனையான் செப்புபதி கத்துக்கு
வந்து துணை செய்தென்னை வாழ்விக்கும்—இந்திரன்மால்
அந்தரரும் வாழ்த்த வரனுமைபாற் கந்தனுக்கு
முந்திவரும் வேழ முகன்.

## 1. பதிகம்.

நீதிமுருகா வினைகள் சேதிமுருகா ஞான
நெறிதந்த கந்த முருகா
நித்தமுரு காவடியர் சித்தமுரு காகலப
நீலமயி லேறு முருகா
வேதமுரு காகமல பாதமுரு காவெனது
வெய்யதுயர் நீக்கு முருகா
விந்தைமுருகா கருணை தந்தமுருகா நளின
வேதனறி யாத முருகா
போதமுரு காபரவு நாதமுரு காவின்ப
பூரண புராண முருகா
புண்யமுரு காசுப்ர மண்யமுரு காவுலகு
பூத்தினிது காத்த முருகா

ஆதிமுரு காபரம சோதிமுரு காவெம்மை
யாதரித் தருளு முருகா
அந்தமுரு காமயிலு கந்தமுரு காசெந்தி
லற்புதா நந்த முருகா 1

தொண்டர்முரு காமறைகள் விண்டமுரு காநீடு
துரியவடி வான முருகா
துங்கமுரு காவெனது தங்கமுரு காவிமைய
சுந்தரி பயந்த முருகா
தெண்டமுரு காவடிமை கொண்டமுரு காஜீவ
ஜெகபர சொரூப முருகா
திவ்யமுரு காவிணையில் சைவமுரு காவெனது
சிந்தைக் கினிக்கு முருகா
பண்டைமுரு காநிறைய கண்டமுரு காதமிழ்
பாடவா நல்கு முருகா
பாலமுரு காசுகுண சீலமுரு காவடியர்
பந்தவினை மாற்று முருகா
அண்டர்முரு காவர சிகண்டிமுரு காவெம்மை
யாதரித் தருளு முருகா
அந்தமுரு காமயிலு கந்தமுரு காசெந்தி
லற்புதா நந்த முருகா. 2

சத்திமுரு காசருவ சித்திமுரு காமதுர
சாந்தகுண மேய்ந்த முருகா
தருணமுரு காகருணை புரியுமுருகா தெய்வ
சங்கர குமார முருகா

முத்திமுரு காமகிமை வைத்தமுரு காவுலக
மூன்றுமினி தீன்ற முருகா
மோனமுரு காபரம ஞானமுரு காதேவர்
மூவர்முத லான முருகா
பத்திமுரு காவுள்ள மொத்தமுருகா வேழை
பாவவினை போக்கு முருகா
பாருமுரு காகுறைக ளேருமுரு காநினது
பாதமலர் நல்கு முருகா
அத்திமுரு காவகில கர்த்தமுரு காவெம்மை
யாதரித் தருளு முருகா
அந்தமுரு காமயிலு கந்தமுரு காசெந்தி
லற்புதா நந்த முருகா. 3

தேற்றுமுரு காகருணை யூற்றுமுரு காவள்ளி
தெய்வானை யின்ப முருகா
செச்சை முருகாவடிய ரிச்சை முருகா வதில
சின்மயா நந்த முருகா
சாற்றுமுரு காவினைகள் மாற்றுமுரு காசாமி
சச்சிதா நந்த முருகா
சந்தமுரு காநதியில் வந்தமுரு காவுண்மை
தஞ்சம்வே றில்லை முருகா
போற்றுமுரு காதவள நீற்றுமுரு காபரம
போதகுரு நாத முருகா
புராணமுரு காகமல சரணமுரு காவேக
போகமரு டியாக முருகா

ஆற்றுமுரு காமயலை மாற்றுமுரு காவெம்மை
யாதரித் தருளுமுருகா
அந்தமுரு காமயிலு கந்தமுரு காசெந்தி
லற்புதா நந்த முருகா. 4

வருகமுரு காகமலை மருகமுரு காவடிமை
வாழ்விக்க வேண்டு முருகா
மதுரமுரு காசமர சதுரமுரு காவெற்றி
வடிவே லணிந்த முருகா
உருகமுரு காமனது தருகமுரு காபாத
வுககமல மேத்தி முருகா
உற்றமுரு காவுரிய சுற்றமுரு காவில்லை
யுலகத்தில் வேறு முருகா
பெருகமுரு காநிதிய மருளுமுரு காவறுமை
பேரழிந் தொழிய முருகா
பெரியமுரு காகருத வரியமுரு காதேவர்
பிரமனரி போற்று முருகா
அருவமுரு காசருணை யுருவமுருகா வெம்மை
யாதரித் தருளு முருகா
அந்தமுரு காமயிலு கந்தமுரு காசெந்தி
லற்புதா நந்த முருகா. 5

ஒருமைமுரு காதுணைசெ யிருமைமுரு காபிறவி
யோட்டிநல மூட்டு முருகா
உண்மைமுரு காவரிய தண்மைமுரு காககன
வும்பர்தொழு மம்பொன் முருகா

உரியமுரு காவினைகள் பரியமுரு காவருள்செ
யோநமசி வாய முருகா
உற்றமுரு காமகிமை பெற்றமுரு காவருமை
யோடவருள் செல்வ முருகா
துரியமுரு காகருணை புரியுமுரு காவிமைய
சுந்தரி பயந்த முருகா
தூயமுரு காவடியர் நேயமுரு காமறைகள்
சொல்லரிய நல்ல முருகா
அருமைமுரு காமுடிவில் பெருமைமுரு காவெம்மை
யாதரித் தருளு முருகா
அந்தமுரு காமயி லுகந்தமுரு காசெந்தி
லற்புதா நந்த முருகா

6

சரணமுரு காஜனன ஹரணமுரு காசாமி
சண்முககு மார முருகா
தந்தைமுரு காவெனது சிந்தைமுரு காநிருத
சங்கார வீர முருகா
அரணமுரு காகொடிய மரணமுரு காவொழிய
வாறெழுத் துதவு முருகா
அன்பின்முரு காதுயர்செய் துன்பமுரு காவகல
வாண்டருள வேண்டு முருகா
கரணமுரு காநினது சரணமுரு காநிறுவு
காதல்பெற வோது முருகா
காத்துமுரு காவினைக ளீர்த்துமுரு காவன்பர்
கவலைக ளறுக்கு முருகா

அருணமுரு காநல்ல தருணமுரு காவெம்மை
யாதரித் தருளு முருகா
அந்தமுரு காமயி லுகந்தமுரு காசெந்தி
லற்புதா நந்த முருகா. 7

செச்சைமுரு காபிரம விச்சைமுரு காவமரர்
சேணுலகு காத்த முருகா
சேருமுரு காவினிது பாருமுரு காகுறைக
டீருநிறை ஞான முருகா
நிச்சன்முரு காமறைகள் மெச்சுமுரு காவுன்னை
நினையவர நல்கு முருகா
நேமிமுரு காகுமர சாமிமுரு காகலப
நீலமயி லேறு முருகா
பட்சமுரு காவைத்தி ரட்சிமுரு காவுனது
பாரமெனை யாள முருகா
பந்துமுரு காவோடி வந்துமுரு காகொடிய
பண்டைவினை போக்கு முருகா
அச்சமுரு காகருணை வைச்சுமுரு காவொழிய
வாதரித் தருளு முருகா
அந்தமுரு காமயி லுகந்தமுரு காசெந்தி
லற்புதா நந்த முருகா 8

சேந்தமுரு காவள்ளி காந்தமுரு காசகல
தேவர்வடி வான முருகா
தெய்வமுரு காபழனி வைகுமுரு காசுகுண
சிற்சுக சொரூப முருகா

சாந்தமுரு காபிறவி நீந்தமுரு காநினது
தாட்புணை யளித்து முருகா
சாமுன்முரு காவறிவு போமுன்முரு காவந்து
தமியேனை யாளு முருகா
ஏந்தன்முரு காதணிகை போந்தமுரு காமயிலி
லேறிவிளை யாடு முருகா
ஈறின்முரு காவென்று மாறின்முரு காவடிய
ரின்பப்ர வாகி முருகா
ஆய்ந்தமுரு காகருணை வாய்ந்தமுரு காவெம்மை
யாதரித் தருளு முருகா
அந்தமுரு காமயி லுகந்தமுரு காசெந்தி
லற்புதா நந்த முருகா. 9

நோக்குமுரு காகருணை தேக்குமுரு காமனதி
னையறுத் தாளு முருகா
நோற்றுமுரு காபிறவி மாற்றமு காவேற்ற
நுண்ணறி வளிக்கு முருகா
தாக்குமுரு காதுயரை நீக்குமுரு காகருணை
தந்தரு ளுவந்து முருகா
சயிலமுரு காநடன மயிலில்முரு காகுமர
சாமியரு ளாழி முருகா
யார்க்குமுரு காவரிய பேர்க்குமுரு காவுரிய
ஈசபவ நாச முருகா
என்றுமுரு காகரண மொன்றிமுரு காநின்னை
யேத்தவர நல்கு முருகா

ஆக்குமுரு காவுலகு பூக்குமுரு காவெம்மை
யாதரித் தருளு முருகா
அந்தமுரு காமயி லுகந்தமுரு காசெந்தி
லற்புதா நந்த முருகா. 10

---

## 2. பதிகம்.

சரணிணையு மன்பர்பவ மரணமற வந்தருள்செய்
சங்கரகு மார வேலா
சந்ததமு மென்றனது சிந்தையி லிருந்துவரு
சஞ்சலம கற்றும் வேலா
அருணகிரி நாதர்புனை செந்தமிழ்ப் பாமாலை
யாண்டபுய சைல வேலா
அஞ்சன விழித்தெய்வ குஞ்சரி குறக்கொடிக்
கானந்த ரூப வேலா
தருணமலை மங்கைஜக தம்பிகை பயந்தசிவ
சச்சிதா நந்த வேலா
தானவர்கள் வீறழிய வானவர்கள் வாழ்வுதரு
சத்ருசங் கார வேலா
அரணென விருந்தெனது குறைமுடித் தெளியேனை
யாதரித் தருளும் வேலா
ஆதிவே லாபரம சோதிவே லாசெந்தி
லற்புதா நந்த வேலா. 1

வண்டமர் கருங்குழற் குறமானை நாடிவனம்
வந்துலவு சந்த வேலா
வாரண மழைக்கவரு நாரணனு மாரணனு
வாழ்த்திநித மேத்து வேலா
சண்டனுயிர் கொண்டசிவ னெண்டிசை யளித்தவுமை
தந்தசிறு மைந்த வேலா
தஞ்சமெனு மன்பர்களை யஞ்சலென வாண்டருள்செய்
சாந்தகுண சீல வேலா
தண்டைசிறு கிண்கிணி சிலம்பினொ டலம்புமிரு
தாளுதவு பால வேலா
சாமிமலை யாவினன் குடிசோலை மலைமேவு
சண்முககு மார வேலா
அண்டையி லிருந்தெனது பண்டைவினை போக்கியெனை
யாதரித் தருளும் வேலா
ஆதிவே லாபரம சோதிவே லாசெந்தி
லற்புதா நந்த வேலா. 2

கஞ்சமல ரயனஞ்ச வெஞ்சிறை யடைத்துலகு
காத்தருளு மாத்த வேலா
கனகமக மேருமலை மேலமரர் காணமுன்
காட்சிதரு மாட்சி வேலா
வஞ்சக நெடுந்தகரி னெஞ்சக மடங்கவிண்
மண்ணூர்ந் துலாவும் வேலா
மாசுண முயங்கமயி லேறிவிளை யாடுமுமை
மைந்தனென வந்த வேலா

பஞ்சணி பதத்தெய்வ குஞ்சரி குறக்கொடிப்
பாவைபுய மேவு வேலா
பாதமல ரன்றுதுணை வேறில்லை யேழையைப்
பட்சமுடன் ரட்சி வேலா
அஞ்சலென விப்பொழுது சஞ்சலமொ ழித்தென்னை
யாதரித் தருள்செய் வேலா
ஆதிவே லாபரம ஜோதிவே லாசெந்தி
லற்புதா நந்த வேலா. 3

மந்திர வெழுத்தாறின் மேவியென் வெய்யதுயர்
மாற்றியரு ளூற்றும் வேலா
வாரணப் பாவைகுஞ் சரிவள்ளி யம்மையக
மலர்மேவு சோதி வேலா
கந்தமலர் மேலயனு மிந்திரை மணாளனுங்
கைகுவித் தேத்தும் வேலா
கன்மவினை மாசகல வென்மனதின் மேவிவளர்
கருணைப்ர வாக வேலா
சந்திர னிலங்குமுடி யந்திவண னுக்கரிய
சதுர்மறைபு கன்ற வேலா
சமரவயில் கொண்டுபொரு நிருதர்குலம் வேரறச்
சாடுபுகழ் நீடும் வேலா
அந்தரம் வணங்கவளர் சந்தமலை மேவியெமை
யாதரித் தருளும் வேலா
ஆதிவே லாபரம சோதிவே லாசெந்தி
லற்புதா நந்த வேலா. 4

கொஞ்சுகிளி யன்னமொழி வஞ்சியுமை யம்மைதரு
குமாரப்ர தாப வேலா
கும்பமுனி யின்பமுற முன்புமறை யின்பொருள்சொல்
கோதற்ற ஞான வேலா
நெஞ்சக மிருந்தடியர் வஞ்சக வினைக்குவைக
ணீறுபட நூறும் வேலா
நீலமயி லேறியுல காசையதி ரக்குலவு
நீண்டபுக ழாண்ட வேலா
பஞ்சவர் களிக்கவன் பாரத முடித்தவரி
பாடுமரு ணீடு வேலா
பாரகம் வணங்க நிறை யோக மமர்ந்தசிவ
பாலகுரு சாமி வேலா
அஞ்சலென் றேழையென் சஞ்சல மொழித்தென்னை
யாதரித் தருளும் வேலா
ஆதிவே லாபரம சோதிவே லாசெந்தி
லற்புதா நந்த வேலா. 5

கூற்றனை யுதைத்துமார்க் கண்டனுயிர் காத்தசிவ
குருவான சத்தி வேலா
குறக்கொடி களிக்கமுன் மறக்குலத் தோன்றலாய்க்
குன்றில்வரு வென்றி வேலா
சாற்றுமறை நாலுமறி யாதபர மானந்த
சாகரத் தமுத வேலா
சாட்சியா யெங்குநிறை மாட்சியாம் காட்சிதரு
தற்பரா நந்த வேலா

சீற்றமிகு சூரனுடன் மாற்றிமயில் சேவலாச்
செய்துலகு காத்த வேலா
தெய்வகுஞ் சரிமாலை சூடியடி போற்றமரர்
சேனைபதி யான வேலா
ஆற்றிவினை மாற்றியெனை யஞ்சலென் றன்பினு
லாதரித் தருளும் வேலா
ஆதிவே லாபரம ஜோதிவே லாசெந்தி
லற்புதா நந்த வேலா. 6

மாறுபடு தாரகனை வேல்கொடு தடிந்துபுகழ்
வானுலகு காத்த வேலா
வண்டமிழ்க் கீரன்சொ லாற்றுப் படைக்குருகி
மாமலை தகர்த்த வேலா
சேறுபட நீராழி வீறுவடி வேலெய்த
தெய்வக்கு மார வேலா
சித்தமொத் தன்பர்புரி பத்திக் கிரங்கியருள்
சின்மயா நந்த வேலா
நாறுமலர் நீபமொடு வெட்சிமலர் மாலைபுய
நாலவொளிர் பால வேலா
நாதமுடி வாகிநிறை வேதமுடி வாகிவளர்
ஞாலவடி வான வேலா
ஆறுமுக மாகிவினை நீறுபட மேவியெனை
யாதரித் தருளும் வேலா
ஆதிவே லாபரம ஜோதிவே லாசெந்தி
லற்புதா நந்த வேலா. 7

கொந்தலர் கடம்புபுனை சுந்தர மிகுந்திலகு
　　கொற்றபுய சைல வேலா
குஞ்சரி குறக்கொடிக் கின்பவடி வாயகில
　　கோளமரு ணீதி வேலா
சந்தத நினைந்துருகு மன்பர்க ணினைந்தபடி
　　தந்தருளு கந்த வேலா
சாமிமலை மேவியெனை யாளடிமை கொண்டுபல
　　சாத்திர முரைத்த வேலா
கந்தமலை மேலமரர் வந்தனை செயப்பாத
　　கமலமரு ணிமல வேலா
கன்னிகை யொருத்திகா முன்னுதவி யாட்கொண்டு
　　காத்தருள்செய் கீர்த்தி வேலா
அந்தமறு பந்தவினை சிந்தவினி வந்தென்னை
　　யாதரித் தருளும் வேலா.
ஆதிவே லாபரம ஜோதிவே லாசெந்தி
　　லற்புதா நந்த வேலா 8

மட்டலவு கந்தமல ரோதிகுற மாதுமண
　　வாளகுண சீல வேலா
வஞ்ச ப்ரபஞ்சவிரு ளெஞ்சவடி யார்நெஞ்சில்
　　வாழுமரு ளாழி வேலா
துட்டவினை வல்லவுணர் பட்டழிய நூறியுயிர்
　　சூறையிடும் வீர வேலா
சோகமற வாளரவ வேகவிட மாறவரு
　　தோகைமயி லேறும் வேலா

வட்டவலை யாழிமுழு துண்டமல யாசல
மாமுனி வழுத்தும் வேலா
வண்ணமலர் மங்கைகலை மங்கையர்க டந்தாலி
மங்கா தளித்த வேலா
அட்டவினை கெட்டொழிய வஞ்சலென் றென்னையினி
யாதரித் தருளும் வேலா
ஆதிவே லாபரம சோதிவே லாசெந்தி
லற்புதா நந்த வேலா. 9

இன்ப ப்ரவாகவலை யாழியாய் வந்தென்னை
யேன்றடிமை கொண்ட வேலா
என்றுமுனை ரட்சிப்ப னென்றுதிரு வாக்களித்
தேழையுயிர் காத்த வேலா
தம்பமுற வைம்புலனு நெஞ்சமு மொருப்படச்
சாற்றியரு ளூற்றும் வேலா
சரவண பவாநந்த குருநாத னுய்வந்து
தமியேனை யாண்ட வேலா
வன்பிறவி நோயிலுழன் மாந்தர்தமை மதியாத
வாழ்வுதந் தருளும் வேலா
வள்ளிதெய் வானையொடு புள்ளிமயி லேறியருண்
மாரிபொழி யீறில் வேலா
அன்பினொடு வந்தெனது துன்பமற வின்றென்னை
யாதரித் தருளும் வேலா
ஆதிவே லாபரம ஜோதிவே லாசெந்தி
லற்புதா நந்த வேலா. 10

துணையாரு மில்லையினி யுன்பாத நம்பினேன்
சோலைமலை யாளும் வேலா
சுற்றமுனை யன்றியினி மற்றொருவ ரில்லையென்
றுன்பமொழி யின்ப வேலா
பணையார் பொழிற்குன்ற மாவினன் குடிமேவு
பாலகுரு சாமி வேலா
பாரகம் விளங்கவள ரேரக மமர்ந்தெனது
பந்தவினை சிந்தும் வேலா
புணையாகி வன்பிறவி யாழிகரை யேறமெய்ப்
புன்மைதெறு நன்மை வேலா
புகழ்பாடி யடிதொழுது மகிழ்வார்தம் வெய்யவினை
போக்கியருள் புரியும் வேலா
அணையாத தீபவொளி யாயென்ற னகமேவி
யாதரித் தருளும் வேலா
ஆதிவே லாபரம ஜோதிவே லாசெந்தி
லற்புதா நந்த வேலா. 11

---

## 5. பதிகம்.

அண்டபகி ரண்டமுட னெண்டிசை குலுங்கநட
மாடிவரு தோகை மயிலே
ஆறுமுகன் வள்ளிதெய் வானையுட னேறிவள
ரானந்த ரூப மயிலே

சண்டையிடும் வல்லவுண கண்டகர் நடுங்கவிரு
தாள்கொண்டு சாடு மயிலே
சந்தத நினைந்துருகு மன்பர்பவ பந்தவினை
தாக்கிச் சிதைக்கு மயிலே
கண்டுமொழி வனவல்லி தெய்வகுஞ் சரியம்மை
களிகூர வாடு மயிலே
கனகமலை யாதிவிண் ணூடெழச் சிறைவீசு
காலெழ வுலாவு மயிலே
தண்டையொடு கிண்கிணி சிலம்பொலி முழங்குமிரு
தாளருளி யாளு மயிலே
சத்திவடி வேன்முருகர் பத்தர்பகை மாறவரு
சத்ருசங் கார மயிலே. 1

அருணகிரி நாதர்புகல் பாவிசைக் கொத்துநட
மாடியருள் வாகை மயிலே
அன்பனக் கீரன்மொழி கேட்டுமலை யொடுபூத
மழியவரு கருணை மயிலே
மருமலர் சொரிந்துபுகழ் பாடுமடி யார்வேண்டும்
வரமுதவு தோகை மயிலே
மகிதலங் காக்குமரி வேதனிந் திரனாதி
வானவர் வணங்கு மயிலே
மரணமொடு வெம்பவ நெடுந்துயர மாற்றியெமை
வாழ்விக்க வந்த மயிலே
மறலிகைச் சூலமொடு வன்பாச நீருக
வந்தென்மன மேவு மயிலே

தருணமிது வள்ளிதெய் வானைமுரு கேசனொடு
தமியன்முன் வருக மயிலே
சத்திவடி வேன்முருகர் பத்தர்பகை மாறவரு
சத்ருசங் கார மயிலே. 2

வஞ்சனை நெடும்பில்லி யேவல்சூ னியமாதி
மாறவரு தோகை மயிலே
வளர்பூத ப்ரேதபை சாசகண வாதையற
வந்தா தரிக்கு மயிலே
கஞ்சமல ரயனெழுத் தழியவென் முடிமீது
காலூன்றி யாடு மயிலே
ககனமுக டதிரவலை யாழிசுவ றச்சிறைக்
கால்வீசி யாடு மயிலே
நஞ்சுகு மெயிற்றுரக ரஞ்சப் புடைத்தின்ப
நட்டமிடு நீல மயிலே
நானெனு மகந்தையறு மோனமுனி வோர்சிந்தை
ஞானவொளி யான மயிலே
சஞ்சல மொழித்தென்னை யஞ்சலென் றுட்கொளத்
தருணமிது வருக மயிலே
சத்திவடி வேன்முருகர் பத்தர்பகை மாறவரு
சத்ருசங் கார மயிலே. 3

சிந்தனைசெ யன்பர்க்கு வந்தவினை தீர்த்தருள்செய்
சித்ரக் கலாப மயிலே
தீராத துயர்நீக்கி யாறுத வின்பமருள்
செல்வச் சிகண்டி மயிலே

கந்தமலர் கொண்டுனது பாதமர்ச் சிக்கவென்
கன்மவினை போக்கு மயிலே
காவலர்கள் சோரர்பகை யாளர் மதமாறக்
கலக்கிப் புடைக்கு மயிலே
ஐந்தருவி னிழல்வள ரிந்திரன் வணங்கநிறை
யாநந்த நல்கு மயிலே
ஆதிபர மேசநிச ராகநட மாடியுல
கைந்தொழி னடாத்து மயிலே
சந்ததமு மென்றனது சிந்தையி லமர்ந்துவரு
சஞ்சல மகற்று மயிலே
சத்திவடி வேன்முருகர் பத்தர்பகை மாறவரு
சத்ருசங் கார மயிலே. 4

பூமிமுழு துண்டதிரு மாலாதி தேவரும்
போற்றவள ராற்றன் மயிலே
புத்தமுத மொத்ததமிழ் மாலைபுனை யன்பர்வினை
போக்கியரு ளாக்கு மயிலே
காமனை யெரித்தபர மேசனைப் பாகிவரு
காலனைச் சீறு மயிலே
கஞ்சன்கை யாணியென் சிரமீது நாடாது
காத்தருள் கலாப மயிலே
பூமழை சொரிந்துவா னுடர்புகழ் பாடியடி
போற்றநின் றாடு மயிலே
பொங்குமரு ளாழியுமை மங்கள விமாசலப்
பூவைகளி கூரு மயிலே

சாமிமுரு கேசனொடு வந்தென்னை யாட்கொளத்
தருணமிது கருணை மயிலே
சத்திவடி வேன்முருகர் பத்தர்பகை மாறவரு
சத்ருசங் கார மயிலே. 5

பங்கய னெழுத்தழிய வெங்கணம னஞ்சவிரு
பாதமலர் நல்கு மயிலே
பாலாழி நீலாழி யாகப் பசுந்தோகை
பரப்பிப் பறக்கு மயிலே
திங்கணுதல் வள்ளிகுஞ் சரியம்மை சீர்பாத
சேவைசெயு மாதி மயிலே
சிந்தித்து நின்பாத வந்திக்கு மன்பர்முன்
சேவைதரு கோல மயிலே
தங்கமலை வேர்பறிய வாளகிரி யீடறத்
தாவிப் பறக்கு மயிலே
தஞ்சமென வந்துபல சஞ்சல மொழித்துநற்
சமையத்தி லாளு மயிலே
சங்கட மகற்றிநிற் கங்குல்பகல் பாடவரு
டந்தருளும் விந்தை மயிலே
சத்திவடி வேன்முருகர் பத்தர்பகை மாறவரு
சத்ருசங் காரமயிலே. 6

பத்துமைகலை வாணிமட மாதரிரு வோர்கருணை
பாலிக்கும் நீல மயிலே
பாசமல நீக்கியரு ளாநந்த ஜோதியென்
பாலாக நல்கு மயிலே

மதியமுத முண்டுயெச் சுழுமுனை திறந்துநல்
வழிகாட்டு மின்ப மயிலே
வாசியை யடக்கிமக மேருகிரி மேற்செல்ல
வண்மைதரு பொன்மை மயிலே
கதியளித் தென்பழைய விதிதொலைத் தின்பநிலை
காணவெனை யாளு மயிலே
காலனைக் கண்டஞ்சி சிந்தைகுலை யாமலென்
கருத்தூ டிருக்கு மயிலே
சதுர்மறைக் கெட்டாத வதுலமுரு கேசனொடு
தருணத்தில் வருக மயிலே
சத்திவடி வேன்முருகர் பத்தர்பகை மாறவரு
சத்ருசங் கார மயிலே. 7

சாட்குண்ய பூரண சிவாநந்த வேலனைத்
தாங்கிநட மாடு மயிலே
சந்தமலை மாதவற் கந்தமறு மெய்ச்சேவை
தந்தருளு மந்த மயிலே
வாட்கண்மட மங்கையரு ளாழியுமை யம்மையெதிர்
வந்துநின் ருடு மயிலே
வண்டடர் தடம்பொழிற் கந்தமா தனச்செந்தில்
வாழு மானந்த மயிலே
வேட்கைநிறை யக்கருணை பாலித்து நாயினேன்
வினைதொலைத் தாளு மயிலே
வேண்டிய வரந்தந்து தாண்டரிய வெய்யபவ
வேலைகரை யேற்று மயிலே

தாட்கமல நம்பினே ளுட்கொண்டு காக்கநற்
றருணமிது கருணை மயிலே
சத்திவடி வேன்முருகர் பத்தர்பகை மாறவரு
சத்ருசங் கார மயிலே. 8

மாறுதி துன்பமற முருகேச னைக்கொண்டு
வந்தாடு நித்த மயிலே
வாழ்வளித் தன்பருறு தாழ்வறத் தீர்த்துமன
மாலொழித் தருளுமயிலே
காரணுதி யொன்றியொரு கணமேனு நிற்குநெறி
காட்டியரு ளூட்டுமயிலே
காமனைச் சீறிமலர் வேதனைத் தூறிவரு
காலனைச் சாடுமயிலே
இராணுதி பந்தமொடு பகைவீ றழித்தெனக்
கின்பமரு ளன்பின் மயிலே
இன்னமுனை யன்றியெவ ரென்னையருள் வோருலகில்
யாருமிலை வீர மயிலே
சரணார விந்தமல ராணுக நம்பினேன்
சகலவினை போக்கு மயிலே
சத்திவடி வேன்முருகர் பத்தர்பகை மாறவரு
சத்ருசங் கார மயிலே. 9

அங்கனக மேருமிசை மரகதக் குன்றென்ன
வாதரித் துலவு மயிலே
அன்னையொடு தந்தையாய் வழியடிமை கொண்டென்னை
யாண்டுபுகழ் பூண்ட மயிலே

மங்கைகுற வள்ளிமன மொத்துவிளை யாடமுன்
வந்தாடு சித்ர மயிலே
மாகநக ரோடுரகர் நாகநக ரோர்நொடியில்
வந்துல்வு விந்தை மயிலே
கங்கையுமை யம்மைமலர் மங்கைசசி வாணியிவர்
களியாட வாடு மயிலே
காத்தருள வேண்டும்வினை தீர்த்தருளி நாயெனைக்
கைவிடா தாளு மயிலே
தங்கமயி லேயுள மிலங்கு மயிலே யெனது
சார்பான வீரமயிலே
சத்திவடி வேன்முருகர் பத்தர்பகை மாறவரு
சத்ருசங் கார மயிலே 10

---

## 4. பதிகம்.

பூமேவு செங்கமல வேதன்வை குந்தன்மால்
பொன்னகர நாத னாதிப்
புங்கவரு நின்னடித் தொண்டுசெய் துய்ந்தவகை
போற்றுமறை சாற்ற வோர்ந்து
தேமேவு நினதெழிற் பாதமல ரன்றிமறு
தெய்வங்க ணாடி யறியேன்
செகதலத் துணையன்றி வேறுதுணை காண்கிலேன்
செல்வக்கு மார துரையே

காமேவு சோலைசெறி யோகஞ் செந்திறணி
காசலம் பழனி வெற்பிற்
கடவுளர்கள் போற்றவுல குயிருய்ய வாழ்கின்ற
கருணைப்பெ ருங்கொண்டலே
மீமேக முறல்கண்டு நின்றாடு மயிலேறி
விளையாடு முருகேசனே
வினையறுத் தனகர்நிறை மனமலர்த் தவிசிலுறை
வேலாயுதத் தெய்வமே. 1

எண்ணரிய பாவமடு விற்புகுந் துண்மூழ்கி
யெழுவதொத் தேழை யடியேன்
இறப்பொடு பிறப்படைந் துலகுபல சென்றலைந்
தெய்த்துக் களைத்த காலை
மண்ணரிய பொன்மனைவி பகைசுற்ற மாதியால்
வந்ததுயர் செப்ப வெளிதோ
மகிதலந் தந்தளித் தீறுசெய் தருள்கின்ற
வள்ளலே பிள்ளை மதியார்
கண்ணுதலு மேத்தமறை யோதுகுரு நாதனே
கஞ்சமல ரஞ்ச னஞ்சக்
கைகொண்டு குட்டிவெஞ் சிறையிட்ட தெய்வமே
கஜவல்லி மணவாளனே
விண்ணவரு மண்ணவரு முய்யவெழின் மயிலேறி
விளையாடு முருகேசனே
வினையறுத் தனகர்நிறை மனமலர்த் தவிசிலுறை
வேலாயுதத் தெய்வமே. 2

ஆலையுறு கன்னலென மேலவினை யானெஞ்ச
மாரைபட் டோய்ந் தாய்ந்தே
யாறாத புண்பட்டு நீறுகி வெந்தழிவ
தறியாய்கொ லெனதப்பனே
மூலமுத லானவுனை யன்றியார்க் கோதுகேன்
மூடனேன் செய்தபிழைகள்
மொழியவெளி தன்றெனினு மேழைக் கிரங்கிநீ
முன்னின்று காக்கவருவாய்
வாலையுமை தந்தருளு மைந்தனே கந்தனே
வளமருவு செந்தில்சாமி
மலைமேவி யெனையடிமை கொண்டமெய்த் தெய்வமே
வனவல்லி மணவாளனே
வேலைசுவ றச்சிகர வேற்பதிர மயிலேறி
விளையாடு முருகேசனே
வினையறுத் தனகர்நிறை மனமலர்த் தவிசிலுறை
வேலாயுதத் தெய்வமே. 3

தொந்தமுறு வாதசீ தச்சுரங் காமாலை
சூலநோய் குன்மங்களும்
தொலையாத குட்டநோய் நீரிழிவு பெருவயிறு
சுகசன்னி முகசன்னியு ட
சிந்தைசித றச்செய்யு முயலகக் கொடியநோய்
திமிர்வாத நோய்கிரந்தி
தீராத சயரோகம் வைசூரி காசங்கள்
செப்புமிவை யாதிபலநோய்

மந்திர வெழுத்தாறு முன்னியுன் சந்நிதியில்
வந்தவரை யண்டிவருமோ
மரகதப் பாவைதரு மாணிக்க தீபமே
மறைமுடிச் செவ்விமலரே
வெந்தறுக ணரவரசு மஞ்சவெழின் மயிலேறி
விளையாடு முருகேசனே
வினையறுத் தனகர்நிறை மனமலர்த் தவிசிலுறை
வேலாயுதத் தெய்வமே. 4

கறுவிவரு பாவாடை ராயனிரு ளன்வெய்ய
காட்டேரி முனிமாடனும்
கறுப்பனொடு சாமுண்டி வீரன்வே தாளங்கள்
கனபூத பைசாசமும்
குறவள்ளி பாகென்ன வமுதென்ன மதுரம்விளை
கொஞ்சுமொழி யஞ்செவிக்கே
கூட்டியுண் டானந்த வெள்ளத்துள் மூழ்கிவெண்
குளிர்மதிக் கண்ணிசூடும்
மறைமுதலு மாதேவி செஞ்செவிக் கதிமதுர
மழலைமொழி யமுதமூற்றி
மகிழ்ச்சிதரு பாலநின் பேர்சொல்லு மவர்முன்னர்
வரநெஞ்சு மஞ்சுமலவோ
விறுவிறென வண்டங்கள் சுழலவெழின் மயிலேறி
விளையாடு முருகேசனே
வினையறுத் தனகர்நிறை மனமலர்த் தவிசிலுறை
வேலாயுதத் தெய்வமே. 5

பாகனைய மொழிமலர்த் திருமாது கலைமாது
பகருமெழி லயிராணிமுற்
பண்ணவர் மடந்தையர்கள் கின்னரர்கள் கிம்புருடர்
பாதலத் தவர்மாதரும்
மோகமுறு காந்தருவ மங்கையரு மறவாமன்
மூப்போது மேத்தி வாழ்த்தி
முடியாத சூரபன் மன்முரு கன்சீய
முகனைச் சவட்டியோரி
காகமொடு கழுகுண்ண வவுணப் பெருங்கடல்
கலக்கிஜய விருதுகாட்டி
கடவுளரை யாண்டகும ரேசனே யெளியனைக்
காத்தருள்வ துன்பாரமே
வேகவஞ் சிறைவீசி யாடுமெழின் மயிலேறி
விளையாடு முருகேசனே
வினையறுத் தனகர்நிறை மனமலர்த் தவிசிலுறை
வேலாயுதத் தெய்வமே. 6

கண்கண்ட தெய்வநீ யென்றுலகு பரவகலி
காலமெய்த் தெய்வ நீயே
கடவுளர்கள் யாவர்க்கு மேலான தெய்வநீ
கருத்தொத்த தெய்வநீயே
மண்கொண்டு கடல்பெருகி யுலகேழு முழுகவிருள்
வளர்கின்ற முடிவுகால
மாயனய னிந்திரனு மாயத் தனித்துறையு
மாதேவ தேவனீயே

எண்கொண்ட வடியரக மலரிலா னந்தமா
யெய்தியரு டெய்வநீயே
என்றறிந் துன்பாத நம்பினே னஞ்சலென்
றெளியேனை யாளவருவாய்
விண்கொண்ட தேவர்நரர் தொழுதேத்த மயிலேறி
விளையாடு முருகேசனே
வினையறுத் தனகர்நிறை மனமலர்த் தவிசிலுறை
வேலாயுதத் தெய்வமே. 7

சந்ததியோ டேழையடி யேனைநின் றிருவடித்
தாமரைக் கடிமைகொண்டு
சகதலந் தன்னிலொரு குறைவுமணு காமலுஞ்
சத்ருபய மில்லாமலும்
வெந்தறுகண் மன்னரொடு சோராதி துஷ்டரால்
வெய்யநோய் விஷஜந்துவால்
வேதாள பூதங்கள் பைசாச மாதியான்
மேவுதுயர் சேராமலும்
செந்திருவி லாசமுங் கலைமங்கை வாசமுந்
திகழ்மன்னர் விசுவாசமும்
செல்வப் பெருக்குமுயர் கல்விப் பிரபாவமுஞ்
சேர்த்தருள வேண்டுமருளால்
விந்தையா னந்தநட மாடுமெழின் மயிலேறி
விளையாடு முருகேசனே
வினையறுத் தனகர்நிறை மனமலர்த் தவிசிலுறை
வேலாயுதத் தெய்வமே. 8

வானாதி பூதநீ கதிராதி சோதிநீ
மறிகடலு மலையுநீயே
வையத்தி லங்குசர வசரங்கள் யாவுநின்
வடிவாகு மவையாவுநீ
தானு யிருப்பினுனை யன்றியான் வேறிலாத்
தன்மையா லஞ்சுகில்லேன்
சரணார விந்தமென தரணாகி நின்றெனைத்
தாங்குமது திண்ணமதனால்
தேனாகி யூறியென் சித்தத் தினிக்குமெய்த்
தெய்வமே செந்தி லிறைவா
சிறியெனைச் சந்ததியொ டடிமைகொண் டாளினித்
திருவருள் சுரந்து குமரா
மீனாதி நவகோளு மதிரவெழின் மயிலேறி
விளையாடு முருகேசனே
வினையறுத் தனகர்நிரை மனமலர்த் தவிசிலுறை
வேலாயுதத் தெய்வமே. 9

---

## 5. பதிகம்.

மணிமந்தர வவுஷதமு மாய்ச்சரா சரமுழுதும்
வாழ்விக்க வந்த வடிவே
துணிகொண்ட திங்கணுதல் வள்ளிமண வாளனே
தோகைகுஞ் சரிநாதனே
பிணிகொண்டு வெந்துயர முறுகின்ற போதுனது
பேரருளை யன்றி யுளதோ
அணிகொண்ட செந்தில்பழ னாபுரித் தெய்வமே
யனாதரட் சகதேவனே. 1

பாதிமதி சூடுமரனேதுகென வோதரிய
பழமறைபு கன்றகுருவே
வேதனை நிறைந்துபல நோயுற மெலிந்துகொடும்
வினையால் வருந்து பொழுதில்
நீதிபுரி யுனையன்றி யாவர்கதி யையனே
நீகருணை செய்யவேண்டும்
ஆதிநடு முடிவற்ற சோதிசுக ரூபனே
அநாதரட் சகதேவனே. 2

பாபத்தி னல்வேறு கர்மத்தி னனலு
பழமறை யுணர்ந்தபெரியோர்
சாபத்தி னற்றுவஷ்ட தெய்வத்தி னலன்னை
தந்தையர்க ணெஞ்சு நொந்த
கோபத்தி னல்வந்த துன்பத்தின லேழை
குன்றிமனம் வாடி மறுகும்
ஆபத்து வேளைதனி லுனையன்றி யாரருள்செய்
அநாதரட் சகதேவனே. 3

பெற்றதாய் தந்தைநீ மற்றுமுள சுற்றநீ
பேசரிய ஞானகுருநீ
வெற்றிதரு துணைவர்நீ முற்றுமரு டெய்வநீ
வேறுரொ னக்குவெங்நோய்
உற்றபொழு தத்திலருள் செய்வரா ரிரங்கியரு
ளோமுருக வென்றமாதுக்
கற்றகா முன்னுதவு சத்திவடி வேலனே
யநாதரட் சகதேவனே. 4

சமையமிது சமையமிது குமாரகுரு சாமியென்
சஞ்சலமொ ழிக்கவேண்டும்
நமனென்ன வந்ததுய ராலாவி குன்றினே
ஞுடிலொரு கதியில்லைகாண்
உமைதந்த வாநந்த ரூபமுரு கேசனே
யோடிவந் தாதரித்தாள்
அமரகுல பாலகா சமரபுரி நாயகா
அநாதரட் சகதேவனே. 5
மடைபட்ட வெள்ளமென வருள்பெருகு மாறிரு
மலர்க்கட்கு மாரதுரையே
கடைபட்ட பேதையெனை யார்வந்து காப்பரிக்
காலத்தி லுன்னையன்றி
முடைபட்ட கடல்சுவற வேல்விட்ட தெய்வமே
முன்னமொரு வெற்பின் முழையூ
டடைபட்ட கீரனைச் சிறைவிட்ட தெய்வமே
யநாதரட் சகதேவனே. 6

நீண்டநா ளாயுனது பாதார விந்தமே
நேசித்திருக்கு மடியேன்
மூண்டெரியு முன்னைவினை யங்கிப் பிழம்பினுண்
மூழ்கிக்கரிந்து மெலிவேன்
காண்டகைய வேல்கொண்டு மயிலேறு தெய்வமே
கருணைச்செ ழுங்கொண்டலே
ஆண்டவா நின்கருணை வேண்டினே னருள்சமைய
மநாதரட் சகதேவனே. 7

தாரகத் தரியபொருள் காரணற் கருள்செய்த
சண்முகக் குமரகுருவே
பாரகத் துனையன்றி வேறுகதி யில்லையென்
படரொழித் தருள்செய்குவாய்
வாரகத் தொளிர்கொங்கை வள்ளிகுஞ் சரியின்ப
மணவாள வடிவேலனே
ஆரணத் துழனிமலி யேரகத் தெய்வமே
யநாதரட் சகதேவனே. 8

வள்ளலுனை யன்றியொரு கதியின்மை கண்டுனது
மலரடிப் புகல்புகுந்தேன்
உள்ளமிக நொந்துளேன் புள்ளிமயின் மீதேறி
யொருநொடியி லோடிவந்து
கள்ளவிழு நீபமலர் மாலையணி மார்பனே
கருணை கடாட்சம் வைத்தெற்
கள்ளியரு டாவேண்டும் வள்ளிமண வாளனே
யநாதரட் சகதேவனே. 9

உன்னாலே முடியாத தொன்றில்லை யென்றன்வினை
யுன்னிலும் வலிதல்லகாண்
பன்னாளு மடிபரவு மேழைக் கிரங்கியருள்
பாலிக்க வேண்டுமுருகா
இன்னாளி லுனையன்றி யாதரிப் பாரெவரு
மில்லையுல கங்கடந்த
அன்னா யுனக்கபய மபயந் திருச்செந்தி
லநாதரட் சகதேவனே

சிவாநந்த சாகரன் செல்விகுஞ் சரிகருணை
செய்கென்ன வேசரவணேற்
பவாநந்த னைப்பரவு செந்தமிழ்ப் பாடலொரு
பத்தினையு மோதுமவர் தாம்
தவாநந்த சோதிமுரு கேசனருள் முழுதுண்டு
சதானந்த வாழ்வுமேவி
அவாநந்த வளர்போக நலமுண்டு சுரரேத்த
அகிலத்தில் வாழிவாழி. 10

## 6. பதிகம்.

நெஞ்சந் துளங்கிமிக வாடியிரு ளையனே
நின்மலா வென்றுதொழலும்
அஞ்சற்க வென்றுளத் தானந்த நல்கியெனை
யாதரித் தாண்டமகிமை
கொஞ்சத்தி லேழைமன மறவாது நின்னடிக்
குற்றேவல் செய்வனென்றும்
பஞ்சொத்த மெல்லடிக் குஞ்சரிக் கன்பனே
பயநீக்கி யாண்டகுகனே. 1

அரனாகி யரியாகி யயனாகி முத்தொழிலு
மாக்கியரு ளுன்றன்மகிமை
தரையுலகி லாரறிவர் கீழ்ச்சென்ற பலகோடி
சன்மத்தி னுன்புரிந்த

வரமருவு மெய்த்தவத் தாலறியு நெறிகண்டு
    மனமாயை நீங்கியுய்ந்தேன்
பரமகுரு நாதனே கருணைதரு நீதனே
    பயநீக்கி யாண்டருகனே. 2

புண்ணிய வசத்தினு லின்பத்துண் மூழ்கினும்
    போக்கரிய துன்பமுறினும்
அண்ணலே யுனதுபெரு மகிமையெக் காலுநெஞ்
    சகத்தெண்ணி யெண்ணிமகிழ்வேன்
கண்ணுண்மணி யாகியுமை வண்ணமடி மீதிலமர்
    கந்தனே செந்திலிறைவா
பண்ணினுட னோசையென வெங்குநிறை தெய்வமே
    பயநீக்கி யாண்டருகனே 3

எந்நாளு முனதடி மலர்க்கடிமை செய்வதல
    தேதுகைம் மாறுனக்குப்
பைந்நாக வணிதுயிலு மாயனயன் முதலான
    பண்ணவர்க ளேத்தெடுப்பக்
கைந்நாக முகவசுர னுயிர்கொண்ட வேல்கொண்டு
    கனகமயி லேறு முருகா
பன்னாளு மறைபுகலு முண்மைதெளி வித்தெனது
    பயநீக்கி யாண்டருகனே 4

ஆரா ரிருந்துமொரு பயனில்லை தாங்கொணு
    வாபத் தடைந்தகாலை
சீராரு முனதுதிரு வடியன்றி யென்னுளந்
    தெளிவித்து வந்துசூழ்ந்த

தீராத வினைவலி தொலைத்தடிமை கொண்டநின்
திருவருட் கிணையேதுகாண்
பாரார் தொழுஞ்செந்தி லேரகம் பழனிவளர்
பயநீக்கி யாண்டகுகனே. 5

இரவிலும் பகலிலுந் துயிறெளிவு தன்னிலு
மின்பதுன் பத்திலேயும்
கரவுபரி பாவபுண் ணியச்செய்கை தன்னிலும்
கர்மங்கள் சூழ்ந்தபொழுதும்
திருமருவு செல்வமொடு வறுமைபிணி தனிலுமுன்
சேவடிம றந்துய்வனோ
பரவுமலை வாய்ச் செந்தி லேரகம் பழனிவளர்
பயநீக்கி யாண்டகுகனே. 6

கண்கண்ட மெய்யான தெய்வமுனை யன்றியெக்
காலத்து மில்லையில்லை
விண்கொண்ட தேவர்தொழ வசுரர்குல மாய்த்துவடி
வேல்கொண்ட முருகேசனே
எண்கொண்ட யாவையுந் தந்தென்னை யாட்கொண்
டிரட்சிப்பது துன்பாரமே
பண்கொண்ட வேதமுத லானபர தெய்வமே
பயநீக்கி யாண்டகுகனே. 7

உலகத்தில் வேறெனக் குறவில்லை துணையில்லை
யுனையன்றி யுண்மையுண்மை
விலகற் கருந்துயர நீக்கியெனை யாட்கொண்ட
வேல்கொண்ட முருகேசனே

குலமுற்று முனதடிமை யென்றளித் தேனென்று
கொண்டா தரிக்கவேண்டும்
பலகற்ற ஞானியர் தொழுஞ்செந்தி லாண்டவா
பயநீக்கி யாண்டருகனே. 8

வேதாதி கலையளவு முண்டென வுரைக்கின்ற
மெய்யான பொருளுநீயே
பூதாதி தத்துவ சமூகநீ போதநீ
போதங்க டந்தபொருணீ
ஆதார வாதேய முழுதுநீ யாதலா லடைக்கல
முனக்கெ ளியனேன்
பாதார விந்தமல ரேத்துநெறி தந்தெனது
பயநீக்கி யாண்டருகனே 9

செந்திலம் பதிபழனி யேரகஞ் சோலைமலை
தென்பரங் குன்றமுதலாம்
அந்தமில் வளம்பதி யபர்ந்தன்பர் பயநீக்கி
யாண்டருக சாமிதன்னை
வந்தபய நீங்கச் சிவாநந்த சாகரன்
வரபுத்ரி பாடுமாலை
சிந்தனைசெய் வோருலகின் மேலான வாழ்வோடு
தீர்க்காயுளும் பெறுவரே. 10

---

## 7. பதிகம்.

பூவிலுயர் செங்கமல துங்கமலரென்னவெழில்
பொங்குமுக முங்கருணையும்
மேவுதிரு நீறுமுறு வாமவிடை யிற்காமும்
வெற்றிதரு தண்டகாமும்

கோவண முடித்தவழ குங்கமல வண்ணமுங்
குறைகழலு மகலாமலே
பாவியென் சித்தத் திருந்துவழி யடிமைகொள்
பழனிமலை முருகேசனே. 1

ஆறாத துன்பமுனை யன்றியெவர் நீக்குபவ
ரகிலங் கடந்தமுருகா
மாறாடு வெய்யவினை போக்கிமல ரடிக்கென்னை
வழியடிமை கொள்ளவேண்டும்
நீறாடு மேனியரன் மாயனய னேத்தமுன்
னேர்சமர பூமிதனிலே
பாறாட வசுரருடல் கூறாட வேல்விட்ட
பழனிமலை முருகேசனே 2

இச்சகத் துனையன்றி வேறொருவர் கதியில்லை
யென்பதுன் சித்தமறியும்
வச்சிரங் கொண்டமக வானுதி தேவர்தொழ
வாழுடு சாத்த துரையே
அச்சுதன் மருகனே சச்சிதா நந்தனே
யழகான மயின்மீதிலென்
பச்சைக்கு ழந்தைகளை ரட்சிக்க வந்தருள்செய்
பழனிமலை முருகேசனே. 3

ஓலமுரு காநல்ல தருணமிது காத்தருள்செ
யோடிவந் தென்றுசொலுமக்
காலமே வந்தென்னை யாண்டமா கருணையைக்
கடையனேன் புகழவசமோ

ஆலவிட முண்டுலக மெல்லாம் புரந்தருள்செ
யாதிபர மேசனீன்ற
பாலனே வேலனே நீலமயி லேறிவரு
பழனிமலை முருகேசனே 4

மச்சரமொ ழித்துமறை மொழிநம்பி நின்பாத
மலரேத்து மவரன்றிவே
றிச்சைவழி யுண்டுழலு மாக்களுணர் வார்களோ
வெண்ணரிய வுன்றன்மகிமை
கச்சணி தனக்குறவர் செல்விமகிழ் நேசனே
கஜவல்லி விசுவாசனே
பச்சைமயி லேறிவரு மச்சுதன் மருகனே
பழனிமலை முருகேசனே. 5

இருவினை யறுத்துனது, திருவடிதொ ழத்தந்தி
வேழைகுடி யடிமைகொண்டு
கருவிலினி வாராம லாண்டருள வேண்டினேன்
கந்தனே செந்திலிறைவா
அருணகிரி பாடுமின் பத்தமிழ்க் கவிபெருகு
மாரமுதம் வாரிவாரிப்
பருகுபன் னிருசெவிக் கருணைவடி வேலனே
பழனிமலை முருகேசனே 6

கர்ணமொடு பொறிபுலனு மொருவழிப் பட்டடிமை
காதலித் தேத்தியுனது
சரணகம லாலயத் தகலாது கூடிச்
சதானந்த நிட்டைமேவி

மரணமொடு வெம்பவ மொழிந்துபர மானந்த
வாழ்வுபெற வேண்டுமருளாய்
பரமகுரு நாதனே வரமுதவு நீதனே
பழனிமலை முருகேசனே 7

நிலையற் றலைந்துதிரி கின்றவென் மனவண்டு
நின்றிருவ டித்தாமரை
மலரிலெழு மானந்த நறவுண்டு களிமேவி
மாறுதி ருக்கவருளாய்
உலகெலாந் தொழுபரம குருவான சிவனுக்கு
முற்றமறை சொற்ற குருவாய்
பலவண்ட கோடிதந் தாண்டசெக தீசனே
பழனிமலை முருகேசனே 8

எந்நாளு முனதடிமை யன்றிவே றில்லையினி
யெவரையுங் கருதநினையேன்
முன்னா ளிழைத்தவினை யாவுந் திரண்டுசெய
மூண்டதுயர் தாண்டநினது
பொன்னான திருவடித் துணைதந்து வம்சமொடு
புல்லனைக் காக்கவேண்டும்
பைந்நாக வணைதுயிலு மாயன்மகிழ் மருகனே
பழனிமலை முருகேசனே. 9

———

## 8. பதிகம்.

உள்ளமுனை யன்றிவே ருருவரைப் பொருளாக
வுன்னாது காணாதுகண்
வள்ளனின் புகழன்றி வினவாது செவிவேறு
மாயாவி லாசவுலகிற்
கள்ளமன மாயையி லுழன்றுதிரி யாதெனைக்
காத்தருள வேண்டுமுருகா
தெள்ளமுத மனையமொழி வள்ளிமண வாளனே
தேவகுஞ் சரிநாதனே. 1

பகரற்கு மெளிதல்ல வெழுதற்கு மெளிதல்ல
பாட்டினும் பாடவரிதே
நிகரற்ற நீகருணை செயினன்றி யென்றுயர
நீங்காது மாயவெற்பு
தகரப் பெருஞ்சத்தி வேலாயு தந்தொட்ட
சாமிமக மேருமலையிற்
சிகரத் தடங்கொங்கை வள்ளிமண வாளனே
தேவகுஞ் சரிநாதனே. 2

மல்வந்த வாறிரு புயாசலக் கடவுளே
மாதங்க மாமுகவனைச்
செல்வந்த குன்றொடு தடிந்தவடி வேலனே
தேவனே யென்றுபாவி
நல்வந்த னஞ்செய்து போற்றுமடி யார்நெஞ்சின்
ஞானவொளி யாகியழியாச்

செல்வந் தழைக்கவருள் வள்ளிமண வாளனே
தேவகுஞ் சரிநாதனே 3

கருவினுறு துயரமும் மரணவெந் துயரமுங்
கருதியுயிர் சோருமடியேன்
ஒருபொழுது மறவாம னின்கமல சரணைத்தி
யுரமுற் றிருக்கவருளாய்
மருமலர் சொரிந்துதுதி பாடுமடி யார்நெஞ்ச
மாமலரமர்ந்து மாறுத்
திருவருளு மான்பெற்ற வள்ளிமண வாளனே
தேவகுஞ் சரிநாதனே 4

குமரசர வணபவா சண்முகா தென்பரங்
குன்றேர கத்தின்முருகா
அமரர்தொழு மாவினன் குடிசெந்தில் சோலைமலை
யளவில்பல குன்றந்தொறும்
சமரவயில் வேல்கொண்டு மயிலேறி விளையாடும்
சாமியென் றேத்துமடியார்
திமிரமல மகலவருள் வள்ளிமண வாளனே
தேவகுஞ் சரிநாதனே 5

சத்திவடி வேல்கொண்டு மயிலேறி வந்தெனது
சஞ்சலமொ ழித்தகத்தில்
நித்தமு மிருந்தருள்செ யசதனுமை பாலனே
நின்மலா குமரகுருவே
பத்திசெயு மெய்யடியர் சித்தத் திருந்துமல
பரிபாக முதவியலகில்

சித்திதரு மானந்த வள்ளிமண வாளனே
தேவகுஞ் சரிநாதனே 6

பாதகம லங்கரைய ஞானவொளி வீசிநின்
பாதகம லங்களேழை
போதக மலர்ந்தொளிர நீதயவு செய்துசிவ
போதமரு ளாதிமுருகா
மாதக விளங்குமடி யாரகம லர்த்தவிசின்
மாசற வமர்ந்துவினைசெய்
தீதகல நாளுமருள் வள்ளிமண வாளனே
தேவகுஞ் சரிநாதனே 7

மங்கையர்கள் பங்கய னெடுஞ்சம னெனுங்கொடிய
மாற்றலரை வென்றுநினது
துங்கமல ரம்பொனடி யாலயத் தினிதுநான்
சுகமுற் றிருக்கவருளாய்
தங்கமலை வில்லிமலை மங்கையுமை தந்தசிவ
சண்முகா செல்வநல்கும்
செங்கமலை வாணிதொழும் வள்ளிமண வாளனே
தேவகுஞ் சரிநாதனே 8

பாவவினை யெங்கணுகு மாதரவுடன் பரம
பானுநின தம்பொனடியில்
தாவுமன மேவியலை யாதமரு மன்பரைச்
சத்திவடி வேலாயுதா

சேவல்விரு தோடுமயி லேறிவடி வேல்கொண்டு
சிறியனக மேவியென்றும்
சேவைதந் தாண்டருள்செய் வள்ளிமண வாளனே
தேவகுஞ் சரிநாதனே 9

---

## ௨. பதிகம்.

பெருகுகய லங்கணருள் வாரிதனி லோர்சிறிது
பேதைக்கி ரங்கியருளிக்
கருகுமன முறுதுயா முழுதையுமொ ழித்தெனைக்
காத்தருள்செய் பூத்த கொடியே
அருவுருவு மாயெங்கு நிறைகுமர மூர்த்திபர
மானந்த ரூபனுடனே
மருமலரு மெனவிருந் துலகமரு ளென்னையே
வள்ளிமலை வனவல்லியே 1

சிந்தையி னிறைந்ததுயர் செப்பவரி தாகுமது
தீர்ப்பவர்க ளாருமில்லை
அந்தர மளித்தமுரு கேசன்வல பான்மேவி
யகிலாண்ட கோடியீன்ற
சுந்தரி மனோன்மணி வாலைபர மேசுவரி
தோகைமயின் மீதிலேறி
வந்தருளி யென்றனைச் சந்ததியோ டாண்டருள்செய்
வள்ளிமலை வனவல்லியே 2

பாராதி யண்டங் கடந்தகௌ மாரியே
பரமகுரு நாதனுக்குத்
தீராத மோகமரு ளானந்த வல்லியே
திங்கள்பல கோடியொத்துப்
பேரா திலங்குமொளி வடிவான வன்னமே
பேதைக்கோர் துன்பமென்றும்
வாராது கன்மவினை சேராது காத்தருள்செய்
வள்ளிமலை மனவல்லியே 3

பாடாத நாவுநினை நாடாத நெஞ்சுநிற்
பணியாத சென்னியுளனாய்
வீடாத துயர்கொண்டு நாடோறு மெலிகின்ற
வினையேனை யாதரித்துக்
கோடாத நெறியன்ப ரூடாகத் வைத்துநின்
கோகநக பாதநல்கி
வாடாத வண்ணமருள் தேடாத செல்வமே
வள்ளிமலை வனவல்லியே 4

தேறாத சூரனுடல் கூறாக வேலெய்து
தேவர்குல மாதரித்த
ஆறா னனக்கடவுள் பேறான செல்வமே
யஞ்சொன்மொழி கொஞ்சுகிளியே
நீறாகி வல்வினைக ளேறாத வண்ணமரு
ணீநல்கி யாதரித்து
மாறாத செல்வமரு ளாறாத சோதியே
வள்ளிமலை வனவல்லியே 5

உலகாசை யற்றுநின திருதாள கத்திலுற
வொருவா திருந்துவெய்ய
மலமா சொழித்தின்ப வாரியுற மூழ்கவொரு
வரநீ•யளிக்க வேண்டும்
தலமாறு மேவியடி யாரையாண் டருள்குமர
சாமியுயி ராகியவர்தம்
வலபா லிருந்துலக முழுதீன்ற வன்னையே
வள்ளிமலை வனவல்லியே 6

ஆதார மாறினுக் கப்பா லிலங்கியொளி
ரவியாத ஞானவொளியே
தீதான கன்மவினை யேதாலு நீங்காது
செல்விநின் கருணையின்றிக்
காதாரும் வேற்கடைக் கண்ணருள் சுரந்துநீ
காத்தருள்செய் பூத்தகொடியே
வாதாடு மூடருக் கெட்டாத செல்வமே
வள்ளிமலை வனவல்லியே 7

மந்தமன மாயையா னுந்ததற் களவில்லை
வருதுன்ப மெத்தகைத்தோ
சிந்தைதனி லுன்பாத மொருபோது மொழியாது
தியானிக்க வரநல்கவே
சந்தமறை வேதனைச் சிறைசெய்த நாதனொடு
தாவுசிறை மயிலேறிநீ
வந்தருள் சுரந்துபவ பந்தமற நன்றருள்செய்
வள்ளிமலை வனவல்லியே 8

யாகாதி கன்மங்கள் ஜபபூசை செய்துமுல
கெங்குவலம் வந்துவாசி
யோகாதி செய்துமுனை யேத்துவா ரதிலேழை
யொன் றுமுண ரேன்கருணைசெய்
நாகாதி லோகங்க ளுய்யவடி வேல்கொண்ட
நாதனுக் கின்பமயிலே
மாகாத வன்றிங்க ளாதியொளி கட்கொளிசெய்
வள்ளிமலை வன்வல்லியே 9

கருகுமகி டேசனை வென் றுமலர் வேதனைக்
கண்டுநகை யாடியின்பம்
பெருகுநின் சரணா விந்தா லயத்திலுறு
பேறுண் டிருக்குமாறு
திருகறுத் தருள்பழனி வாசமுரு கேசனொடு
சேவைதந் தருளமயின்மேல்
வருகவந் தொருவரந் தருகவென் னன்னையே
வள்ளிமலை வனவல்லியே 10

---

## 10. பதிகம்.

பூவைநிற மாயன்மலர் வேதன்மக வானொடு
புங்கவர்க ளுய்யவெய்ய
மாவைவடி வேல்கொண்டு சாடியருள் குமரேசன்
வாமத்தி லங்குமயிலே

பாவவினை யாற்பெரிது நோவுறு மெனெஞ்சமுன்
பாதமலர் பற்றியுய்யச்
சேவையருள் கற்பகக் காவில்வள ரன்னமே
தேவகுஞ் சரியம்மையே 1

விதிவலிதி யாராலும் வெல்லவரி தென்றுனு
மெய்த்தெய்வ மதனைவெல்ல
மதிதந்து காக்குமெனும் வேதமொழி பொய்கொலோ
மாதங்க மருள்செல்வியே
கதிகண்டு யானுய்யு மாறருள வேண்டுமென்
கற்பகக் காவினமுதே
திதிபுரியு மாயன்மக ளானபர தெய்வமே
தேவகுஞ் சரியம்மையே 2

நாப்பட்ட செந்தமிழ்ப் பாமாலை பாடியெந்
நாளுமுனையேத்தி மகிழ்வேன்
கூப்பிட்ட போதுவந் தருள்செய்வை யென்றுறுதி
கொண்டுஜெக மீன்றதாயே
மாப்பட்டு வீழவடி வேலெய்த முருகேசன்
வாமத்தி லங்குமயிலே
தீப்பட்ட புழுவொத்து வாடுதுயர் போக்கியருள்
தேவகுஞ் சரியம்மையே 3

பொய்யுலக வாழ்க்கையை மெய்யென்ன நம்பியிழி
போகத்துண் மூழ்கி மாழ்கிச்
செய்யும்வகை யறியாத மையன்மன மாயையாற்
சேவடி மறந்துகெட்டேன்

நையவரு துன்பமிக வாதரிப்பா ரொருவர்
ஞாலத்தி லில்லையடியேன்
செய்யும்வகை யறிகிலே னுய்யுமா றருள்புரிக
தேவகுஞ் சரியம்மையே 4

புன்னை வாழ்த்தவல மூரவிருகால் கைகண்
மலர் தூவி யர்ச்சிக்கவென்
காயமுழு துன்பணி செயக்கொண்டு பேதையேன்
கன்மவினை மோக்கியருளாய்
தாயுன்னை யன்றியொரு துணைவே றெனக்காரு
சஞ்சல நிறைந்தபோது
சேயென்னை வந்தஞ்ச லென்று தரித்தருள்செய்
தேவகுஞ் சரியம்மையே 5

கள்ளமன மாயையாற் பிள்ளை தா ராதியிற்
கட்டுண்டு கவலைபெருக
உள்ளமிக நொந்துபடு மொழியாத துன்பநீ
யொழித்தா தரிக்கவேண்டும்
வெள்ளவருள் வாரிதனி லாட்டியன் பர்க்கென்றும்
வீடாத வின்பநல்கும்
தெள்ளமுத மயமான மதிவதன வல்லியே
தேவகுஞ் சரியம்மையே 6

கருவினுறு துன்பமும் மரணவெந் துயரமும்
கருதியுயிர் சோருமெளியேன்
மருவலரு நின்சரண கமலா லயத்திலி று
மாந்தின்ப மேவவருளாய்

கரைபுரளு மானந்த வெள்ள ப்ரவாகமாய்க்
கருணைமுரு கேசனிடபால்
திருவருள்கொ ழித்தமர்ந் தாருயிர்க் கின்பமருள்
தேவகுஞ் சரியம்மையே 7

அரமகளி ரடிபரவ மலர்மகளிர் போற்றவிண்
ணமரர்கண மேத்தெடுப்ப
வரமுனிவர் மறைபாட நிறையடியர் துதிகூற
வண்ணவைந் தருநீழலிற்
கருணைவடி வானகுக னேடமர்ந் தரசுபுரி
கன்னிப் பசுங்கிள்ளையே
தெருமர லொழித்துமன மருளொழித் தாண்டருள் செய்
தேவகுஞ் சரியம்மையே 8

வைகுந்த முதலான பதவியவ ரவர்பெற்று
வாழக் கடைக்கணித்து
மெய்கொண்டு மிளிர்கின்ற வேல்கொண்ட கண்ணருளி
னீசிறிது நல்கவேண்டும்
பைகொண்ட வாளரவின் வாய்ப்பட்ட தேரைபோற்
பதைபதைக் கின்றவெளியேன்
செய்கின்ற வாறென்கொ லுய்கின்ற வாறருள்செய்
தேவகுஞ் சரியம்மையே 9

நியன்றி யாருதுணை வேறில்லை யுலகத்தில்
நித்யகல் யாணிபெற்ற
தாயன்று பிள்ளைக் கிரங்குபவ ராரெனது
சஞ்சலமொ ழிக்கவேண்டும்

வேயொன்று தோளின்வரை தோருடு வேழத்தை
மேவிப்பி ணித்தமயிலே
சேயன்றோ நானுனக் கென்னு ளிரங்குவது
தேவகுஞ் சரியம்மையே. 10



வேறு.

பொன்னார் பழனிப் புகழார் சயிலப்
புனிதா மறைதேர் பொருளே யமலா
என்னா யகனே யெனதா ருயிரே
இறைவா விமையோர் தலைவா சரணம்
பன்னா ளினுமுன் பதமே பணிவேன்
பலவா மிடருற் றழிவே னிதுவென்
அன்னாய் தருமோ வருளா தெவனே
அலைவா யுறைவா யயில்வே லவனே, 1

வேலா யுதனே விமலச் சுடரே
விகிர்தா வுலகாய் விரிவாய் நிறைவாய்
ஆலா லமெனா வடருந் துயருக்
கடியே னிரையா யழிகோ துவசக்
காலா யுதனே கருணைக் கடலே
கமலத் திருமான் மருகா முருகா
சேலார் விழிகுஞ் சரிநா யகனே
செந்திற் பதிவாழ் தேவா திபனே, 2

அதிரா வருவெவ் வினைமா கடலே
ழதனிற் பெரிதா வலைவே னெளியேன்
கதிகாண் வகையொன் றறியே னெளியேன்
கருணா கரனே கழனீ யருளாய்
விதிமா லயனுக் கரியாய் பெரியாய்
வேதா கமமா திகடந் தருளும்
மதிவா ணுதன்மான் மகணா யகனே
வரதா பயனே முருகா குகனே. 3

குகனே மறையோ தியவே தியனே
குமரா வமரா பதியாண் டவனே
நகமா மகடந் தருள்பா லகனே
நதிசேர் சடிலத் திறைசற் குருவே
சகமே ழருள்குஞ் சரிநா யகனே
தகுமோ வெளியேன் வினைமா சுறவே
புகல்வே றறியே னுனையே சரணம்
புகுவே னெனையா தரியா தெவனே. 4

எவனா ருயிரா யுலகா யுலகுக்
கிறையா யருளே யுருவாய் நிறைவான்
அவனே நமையா ளுடையா னரனாய்
அகிலே சுரனைச் சரணா மடைவோம்
தவமே புரிவோ மலமா சகலச்
சலியா திருதா டுதிசெய் திடுவோம்
பவமே யொழிவோ மயன்மா லெவரும்
பரவப் பெறுவோ மெழுநெஞ் சகமே. 5

நெஞ்சத் திருகோ நினைதற் கரிதாம்
நிறையுந் துயரோ குறையா திறைவா
கஞ்சத் தொருவன் படையா தொழியான்
கருமே தியினு ரழியா தொழியார்
அஞ்சற் கெனவந் தருள்வா ரெவரே
அருணத் திருமான் மகனு யகனே
வஞ்சப் பிறவித் துயரந் தொலைய
வருவா யருள்வாய் கருணு லயனே. 6

கருணு லயனே கதிதா வெனநின்
கழலே துணையா மறவா துறுவேன்
வருமா வினைவெங் கடலிற் புகுதா
மடிகோ முருகா வரதா வலைவாய்த்
திருமா நகர்வாழ் சிவனே மலரோன்
திருமா லறியாப் பெருமான் மகனே
அருளா லினிவந் தருளா யெளியேன்
அவலங் கெடமா மயில்வா கனனே, 7

கனகத் திருநா டருளித் தருவாழ்
கடவுட் குலம்வாழ் வுறநல் கிறைவா
மனமொத் துணையே யிரவும் பகலும்
மறவா வரமொன் றருளற் கரிதோ
சின்முற் றெழுமா மறவிக் கெளியேன்
செயுமா றெவனோ தெரியே னினியுன்,
அனகச் சரணே சரணம் புகுவோம்
அடியே முயவந் தருளாண் டவனே. 8

ஆண்டா யறியா விளமைப் பருவத்
ததுகொண் டெளியே னுனையே தொழுவேன்
வேண்டே னயன்மால் பெருவாழ் வதுவும்
விகிர்தா பழனிப் பதிவாழ் குமரா
தூண்டா மணியா யொளிர்நின் பதமெய்த்
துணையே பெருவாழ் வெனவெண் ணுவனுன்
மாண்டா லெனவெந் துயரான் மெலிகோ
வரதா பயவே ரகநா யகனே. 9

அகமுற் றொளிருஞ் சுடரே யுனையா
னறியா துழலத் தகுமோ புகலா
யிகநற் சுகமும் மதியா துலகத்
தெவரும் பொருளன் றெனவாழ் வதுமுன்
புகழ்பொற் சரணத் துணைகண் டுறலாம்
பொருமா வினைவெம் பகைவென் றிடலாம்
துகளற் றொளிர்தென் பழனிக் குமரா
சுகமுற் றிடலா யெனவே யலவோ. 10

அலகோ டியபே ரருளார் கடலென்
னளவோ பெருகா தலைவா யிறைவா
உலகே ழுடையா யுமையாள் புதல்வா
உறுகா தலினு லுனையே தொழுவேம்
பலவே தனையா லுயிர்சோ ருவதோ
பணியா யுனதொண் பதமே பாவிச்
சலமா தியவா மிகல்பற் றறவே
சரணா கதிநீ கருணா கரனே. 11

## கலித்துறை.

முக்காலும் வேலு மயிலுமென் றேதென முன்னைவினை
யைக்கா லறுத்தெனை யாட்கொள் நீயரு ளம்மொழியை
மைக்காலுங் கட்குற வள்ளிபங் காமற வாதடியேன்
யெக்காலும் வேலு மயிலுமென் பேனரு ளின்புறவே. 1

படுத்தாலும் வேலு மயிலுமென் பேன்பர மானந்த நீ
கொடுத்தாலும் வேலு மயிலுமென் பேன்குறை யாதசெல்வம்
அடுத்தாலும் வேலு மயிலுமென் பேன்பிற ரச்சுறுத்தித்
தடுத்தாலும் வேலு மயிலுமென் பேன்சிவ சண்முகனே. 2

உண்டாலும் வேலு மயிலுமென் பேனெழி யாதசுகம்
கொண்டாலும் வேலு மயிலுமென் பேன்றுயில் கூர்ந்தறிவு
விண்டாலும் வேலு மயிலுமென் பேன்வெவ் வினைப்பகையைக்
கண்டாலும் வேலு மயிலுமென் பேன்செந்திற் காங்கயனே. 3

நின்றாலும் வேலு மயிலுமென் பேனெடி தேகுநெறி
சென்றாலும் வேலு மயிலுமென் பேன்வினை தீர்ந்துபகை
வென்றாலும் வேலு மயிலுமென் பேன்வினை யேவளர்ந்த
தென்றாலும் வேலு மயிலுமென் பேனரு ளேரகனே. 4

விழுந்தாலும் வேலு மயிலுமென் பேன்றுயில் மேவித்தெளிந்
தெழுந்தாலும் வேலு மயிலுமென் பேன்பொரு ளெய் தியின்ப
தழைந்தாலும் வேலு மயிலுமென் பேன்சஞ் சலத்தின்மனங்
குழைந்தாலும் வேலு மயிலுமென் பேன்செந்திற் கொற்றவனே.

வாழ்ந்தாலும் வேலு மயிலுமென் பேன்வறு மைத்துயராம்
சூழ்ந்தாலும் வேலு மயிலுமென் பேன்தொலே யாதவின்பத்
தாழ்ந்தாலும் வேலு மயிலுமென் பேனழி யாநரகில்
வீழ்ந்தாலும் வேலு மயிலுமென் பேன்செந்தில் வேலவனே. 6

படித்தாலும் வேலு மயிலுமென் பேன்பகை கோடிசினங்
தடித்தாலும் வேலு மயிலுமென் பேனர வாதிவிடங்
கடித்தாலும் வேலு மயிலுமென் பேன்கல கத்திருடர்
பிடித்தாலும் வேலு மயிலுமென் பேன்சிசெந்திற் பேரொளியே. 7

துதித்தாலும் வேலு மயிலுமென் பேன்பிறர் தூறியவ
மதித்தாலும் வேலு மயிலுமென் பேன்மகத தானசெல்வம்
கதித்தாலும் வேலு மயிலுமென் பேனரு காத்துயர்நீ
விதித்தாலும் வேலு மயிலுமென் பேன்செந்தில் வேலவனே. 8

மறந்தாலும் வேலு மயிலுமென் பேன்மறந் தேழையைநீ
துறந்தாலும் வேலு மயிலுமென் பேன்தொலே யாதவின்பஞ்
சிறந்தாலும் வேலு மயிலுமென் பேனிந்தத் தேகத்தைவிட்
டிறந்தாலும் வேலு மயிலுமென் பேன்றிரு வேரகனே. 9

கெட்டாலும் வேலு மயிலுமென் பேன்கிளே யானவர்கை
விட்டாலும் வேலு மயிலுமென் பேன்புவி வேந்தர்மெச்சி
நட்டாலும் வேலு மயிலுமென் பேனய வாததுட்டர்க்
கெட்டாத கொம்புக் கனியே திருச்செந்தி லீசனே. 10

முற்றிற்று.



# Books indispensible for all Libraries.

---

## "KNOWLEDGE IS POWER."

### * புத்திமானே பலவான். (இரண்டாம் பதிப்பு)

இது ஒரு லோபியையும் இரண்டு சகோதரர்களையும்பற்றிப் பேசமொரு நாவல். இதில் சகோதரவாஞ்சை, கல்வி, ஒழுக்கம், உலுத்தகுணம். செல்வம். ஈகை, மானம், கர்வம் இவைகளாலுண்டாகும் நன்மை தீமைகள் முதலியன ஆன்றோர் மேற்கோள்களுடனும், தக்க முதுமொழிகளுடனும் மாணவர்கள் வியாஸமெழுதப் பேருதவி யளிக்குமாறு நன்கு விளக்கப்பட்டிருக்கின்றன. கதாநாயகன் தன் புத்திசாதுர்யத்தினால் 'புத்திமானே பலவான்' என்பதை நிலை நிறுத்துவது புத்தி புகட்டக்கூடியதாயும், வினயமாயுமிருக்கும். இது சிறுவர்களுடைய அறிவின் அபிவிருத்தியின் நோக்கமாகவே எழுதப்பட்டது. இதில் பெண் வர்ணனை என்பதே கிடையாது.

விலை அணா. 0-8-0

---

## "BHARATA, THE DUTIFUL."

## (4th: Edition.)

### * பாரதன். (நான்காவது பதிப்பு.)

இது, வால்மீகி ராமாயணத்திலிருந்து பாதபாதுகா பட்டாபிஷேகமென்னும் பாகத்தை மாத்திரம் தனியே பிர்மஸ்ரீ-

---

* துரைத்தனத்தாரால் அங்கீகரிக்கப்பட்டது.

வரகவி. திரு. அ. சுப்ரமண்யபாரதியாரவர்களால் சிறுவர், சிறுமியர் படித்துப் பயன் பெறுதற்பொருட்டுச் செவ்விய நடையில் எழுதப்பட்ட சிறு புத்தகம். இதில் ஸத்யம் தவறாமை, பிதிர் வாக்ய பரிபாலனம், சகோதரவாஞ்சை, ராஜநீதி, பதிபக்தி, உலக நடைக்குரிய தருமங்கள் முதலியன, அநேகவித நியாயங்களுடனும், கம்பராமாயணத்திலிருந்து திரட்டப்பட்ட முக்யமான மேற்கோள்களுடனும், அவைகளுக்குரிய பொழிப்புரையுடனும் முதுமொழிகளுடனும் இனிது விளக்கப்பட்டிருக்கின்றன.

ராபர் 0-5-0 கில்டு கலிகோ பயிண்டு 0-8-0

---

## "CARNATIC FAIRY TALES."

### * கர்நாடக யோகினிக் கதைகள்.

இதில் தெய்வபக்தி, மாதுருபக்தி, பிதிர்பக்தி, சகோதர நேசம், ஜீவகாருண்யம், நீதிசம்பந்தமான விஷயங்கள், பெண்களுக்குரிய கற்புடைமை, பலவகையான நீதிகள் முதலியவற்றை விளக்கிக்காட்டும் ஐந்து சிறுகதைகள் மனத்திற்கு மகிழ்ச்சிதருமாறு எழுதப்பட்டிருக்கின்றன. இது கல்விபயிலும் சிறுவர்களுக்குப் பெரும் பயனளிக்குமென்பதற் கையமில்லை.

விலை அணு 0-4-0

---

### * பக்தி சந்திரிகா நெ 1

ஸ்ரீமதி —இது பக்தியைப் புகட்டக்கூடிய ஒரு சிறிய கதை; இதில் பகவானையே பதியாக அடையவேண்டுமென்று பக்தி செய்துவந்த ஸ்ரீமதி என்னும் ஒரு பெண்ணை விரும்பிய இரண்டு முனிவர் குரங்கு ரூபமடைவதும், சுயம்வர மண்ட

* துரைத்தனத்தாரால் அங்கீகரிக்கப்பட்டது.

பத்தில் அவர்களுக்கிடையே ஜகத்ரக்ஷகராகிய மகாவிஷ்ணு சுந்தர வடிவத்துடன் தோன்றுவதும், அப்பெண், பகவானுக்கு மாலையிடுவதும், முனிவர்கள் ஸ்ரீமதியால் அவமதிக்கப்படுவதும் அதியற்புதமாயிருக்கும். பரந்தாமன் பக்திக்குக் கட்டுப் பட்டவர் என்பது இக்கதையால் நன்கு விளங்கும். சிறுவர் சிறுமியர் படிக்க மிகவும் பயன் பெறுவார்கள். நடை வெகு சுலபமானது. விலை அணு 0-1-6

---

## Works by
## Balasaraswathi Devakunjari Ammal.

**பாலஸரஸ்வதி தேவகுஞ்சரியம்மா ளியற்றிய புத்தகங்கள்.**

1 மங்களாம்பாள்—இரண்டாம் பதிப்பு—இது படிப்போர் மனத்துக்கு இன்பந் தரத்தக்க இனிமையான சரித்திரம். தேனும் பாகும் கலந்ததெனச் சொல்லத்தக்க இனிய மொழிகளைக்கொண்டு சிறுவர்களும் படித்தறியக்கூடிய தமிழ் நடையில் எழுதியுள்ளது. இதில் பக்திரசம், ஜீவகாருண்யம், பொறுமை, தயை முதலிய உத்தமகுண விசேஷங்களும், செல்வச் செருக்குற்றிழிவுறுதல், அகங்காரத்தா லழிதல், நன்றி மறத்தல் முதலிய பல துர்க்குணங்களினுல் விளையும் தீங்குகளும், படிப்பவர்கள் நன்குணர்ந்து நல்வழிப்பட்டுய்யுமாறு விளக்கியுள்ளன. 0- 8- 0

2 கர்நாடக யோகினிக் கதைகள். 0- 4- 0

3 விஜயலெக்ஷ்மி - ஓர் இனிய நாவல். 0-10-0

4 சுப்ரமண்யர் தோத்திரக்கோத்து. 0 -3- 0

---

## WORKS BY BRAHMASRI VARAKAVI THIRU. A. SUBRAMANYA BHARATHIAR.

## ப்ரஹ்மஸ்ரீ- வரகவி- திரு- அ- சுப்ரமண்ய பாரதியாரவர்க ளியற்றிய புத்தகங்கள்.

1. ஜடாவல்லவர்—(திருத்தமான இரண்டாம் பதிப்பு) சேர்க்கவேண்டியவைகளைச் சேர்த்து, எடுக்கவேண்டியவைகளை எடுத்து வெகு இனிமையாக இப்பதிப்பு, பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. இது ஒரு கிராம முன்சீப்பைப் பற்றிப் பேசும் அருமையான சரித்திரம். இதில் ஜீவகாருண்யம், வரதக்ஷிணையால் விளையும் கெடுதி, சேவகா விருத்தியின் இழிவு, மாமி மருமகளுக்குள் உண்டாகும் வழக்குகள், தம்பதியின் ஒற்றுமை, தெய்வ பக்தி, கற்புடைமை, முன்சீப் கணக்கு வழக்குகளைத் தாசில்தார், டிப்டி கலெக்டர் முதலிய உத்தியோகஸ்தர்கள் பரிசோதிப்பது முதலியனவும், இன்னும் பலவிதமான நீதி போதனைகளும் நன்கு விளக்கப்பட்டிருக்கின்றன. இதனை முக்கியமாக ஒவ்வொரு கிராம முன்சீபும் வாசிக்கவேண்டியதும் தவிர மற்றெல்லாரும் வாசிக்க வேண்டியதவசியம். ஏற்கனவே படித்தார் பலரும் இதனைப் புகழ்ந்து பேசியுள்ளார். ஆதலால் இதைப்பற்றி அதிகம் எழுதவேண்டிய தவசியமில்லை. விலை ரூ. 1-8-0

2 கற்பின் வெற்றி—இப்புத்தகம் நவரசங்களும் அமையப்பெற்றது. ஸ்திரீ புருஷர்களுக்கு நல்ல நீதியையும் ஒழுக்

கங்களையும் போதிக்கத்தக்க சொற்சுவையும் பொருட்சுவையும் நிரம்பப் பெற்றதோர் நாடகம். இடையிடையே இன்பந் தரத் தக்க செய்யுட்களும் ஆன்றோர் அமுதமொழிகளும் விரவியுள் ளன. இப்புத்தகமுழுதும் படித்தவர்கள் கடைசியில் ''கற்பின் வெற்றி ப்ரதாபத்தையும்'' "பாபிகளின் கதி இப்படி முடியும் போலும்'' என்ற ஆச்சரியமான கற்பனையையும் அறிவார்கள். இதைப் படிப்பவர்கள் படிக்கும்போதே நாடகமேடையில் நாட கம் நடிக்கும்போது கண்ணுற்று அடையும் ஆநந்தத்தை அடை வார்கள் என்பதற்கையமில்லை. அநேக நாடக சபையாரால் நடத்தப்பட்டும் கலாசாலைகளில் உபபாடமாக வைக்கப்பட் டும் வருவதாம். 0-8-0

3 சுந்தரவல்லி—இதில் கதாநாயகியாகிய சுந்தரவல்லி யென்னும் பெண் தான் கோரிய கணவனை அடையும் அதிசய மும், அந்நங்கையின் நன்னடக்கையும், பாலசுந்தரத்தின் நற் குணமும், மதனஸேனுவின் ஆச்சரிய சரிதமும், பாலசுந்தரத் தின் சிநேகிதனுன ஒரு மித்ரத்துரோகியடையும் கதியும், சுந்தர வல்லி, பாலசுந்தரம் இவர்கள் இன்புற்று வாழ்வதும் வெகு ரம்யமாயிருக்கும். விலை 0-8-0

4 பால விநோதினி- இதில் தென்னுலிராமன் கதையும் கோமுட்டிக்கதையும் ஆன்றோர் நீதிவாக்யங்களுடன் சிறுவர் சிறுமியர் படித்துப் பயன்பெறுமாறு எளிய நடையில் வெகு நன்ருய் எழுதப்பட்டிருக்கின்றன. விலை 0-1-6

5 வியாஸங்கள் I. தெய்வ மகிமை.—தெய்வத்தின் மகிமையை விளக்கிக் காட்டும் ஒரு வியாஸம். 0- 1- 0

II. பெற்றோர் பெருமை—பெற்றோரின் பெருமையை விளக்கிக் கூறும் ஒரு வியாஸம். 0- 1- 0

6 * பரதன். "Bharata the Dutiful" 0- 5- 0

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 7 | ஸ்நேகலதா | 0 -5- 0 | 10 | நவநீதம் | 0- 3- 0 |
| 8 | மதாலஸா | 0- 3- 0 | 11 | பத்மினி | 0- 3- 0 |
| 9 | ஜெயலெக்ஷ்மீ | 0- 8- 0 | 12 | வனஜாக்ஷீ | 0- 8- 0 |

13 கதாசரித்சாகரம் (I Part) சம்ஸ்கிருதத்திலிருந்து தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது; இதுகாறும் தமிழில் வராதது; இதிலிருக்குங் கதைகளின் போக்கு இதுகாறும் கேட்டிராத நவநவமான யுக்திகளுடன் கூடியதாயிருக்கும்; பாரசீகக் கதைகளும், அராபிக்கதைகளும், ரெய்னால்ட்ஸ் நாவல்களும் இதற்கிணையாகாவென்று கூறலாம். இதனைப்படிக்க ஆரம்பித்தால் முற்றிலும் படிக்குமாறு செய்யும்; பெயருக்கேற்ப கதைகள் சாகரம் போலவேயிருக்கும். கதாசரித்சாகரத்தைப் போன்ற கதை வேறொன்றில்லையென்று பண்டித நடேசசாஸ்திரியார் தாமியற்றியுள்ள தீனதயாளு முதலிய நாவல்களின் முகவுரையில் எழுதியிருப்பது பிரசித்தமாம்.

விலை ரூபாய் 1-4-0

---

* Approved as Text Book for S. S. L. C. Examination 1916.

சூதசங்கிதா ஸாராம்ருத வசனம்.

இப்புஸ்தகம் இதுகாறும் வசன நடையில் எழுதப்பட வில்லை. அக்குறையை நிவர்த்தித்தற் பொருட்டும் யாவரும் எளிதில் படித்துப் பயன் பெறுமாறும் சுருக்கமாய்த் தமிழில் வெளிப்படுத்தப் பட்டிருக்கிறது. இந்த நூலை ஸ்ரீமத் சங்கராசாரியர் பதினெண்முறை படித்துப் பிர்ஹ்மஸூத்ர பாஷ்யத்தைச் செய்தன ரெனின், இதன் பெருமையைக் கூறவும் வேண்டுமோ? இதில் பிர்மகீதை, சூதகீதை முதலிய அருமையான விஷயங்கள் அடங்கியிருக்கின்றன. விலை 1-0-0

தாயுமான சுவாமிகள் திருப்பாடற்றிரட்டு-முதல் மூன்று பாடல்களுக்கு விரிவான உரையும், நூல் முழுதும் வரும் பாடல்களிலுள்ள அரும்பதங்கட்குக் குறிப்புரையும் அடங்கியது. (சுவாமிகள் சரித்திரம், படத்துடன்) ரூபாய் 1-0-0

பட்டினத்துப் பிள்ளையார் பாடல் முற்றும், புராண முற்றும், பத்திரகிரியார் புலம்பல் முற்றும் (பட்டினத்தார், பத்திரகிரியார் சரித்திரங்களுடன்) ரூபாய் 1-0-0

நாலடியார்—மூலம், பதவுரை, பொழிப்புரை, விசேஷவுரை, இங்கிலீஷ் மொழி பெயர்ப்புடன் ரூபாய் 1-2-0

திருவாசகம்— (பாக்கெட் சைஸ்) விலை 0-10-0

ஸ்ரீ பர்த்ருஹரி வைராக்கியசதகம் உரையுடன்—வைராக்கியத்தையும் ஞானத்தையும் விசேஷமாகப் போதிப்பது ஸ்ரீ பர்த்ருஹரியின் சரித்திரமும் உள்ளது) 0-3-0

கந்தரநுபூதி உரை—நூறு பாடலுக்கும் உரையும், அருணகிரி நாதர் சரித்திரச் சுருக்கமும். அணா 0-6-0

ஸ்காந்தப்புராணம்—சிவரகசியகண்டம் ஸம்ஸ்கிருத மூலம் தனி கிளேஸ். (கில்டு பயிண்டு.) விலை ரூ. 6-0-0

ஷை ரப் 5-0-0

ஸ்காந்தபுராணம்—தமிழ் வசன மொழிபெயர்ப்பு ஏழு காண்டங்களும். (கிளேஸ்) (கில்டு பயிண்டு.) 7-0-0

ஷை ரப் 6-0-0

வீவேகாநத்தர் ஞானத்திரட்டு—இதில் விவேகாநந்த ஸ்வாமிகள் செய்த அரிய பெரிய உபந்யாசங்கள் அடங்கியுள்ளன. I & II Part, விலை ரூ. 1-0-0

சிராத்தகாண்டம் உத்தரபாகம்.—வைத்யநாத தீக்ஷீயம் (கிரந்த லிபியில் ஸ்லோகமும் தமிழுரையும்) இதில் சிராத்தத்தைப்பற்றிய சகல விஷயங்களும் அடைங்கியுள்ளன. ரூ. 2 8 0

சரஸ்வதியந்தாதி—(கவிசிரேஷ்டராகிய கம்ப ரியற்றியது-உரையுடன் கம்பர் சரித்திரமும் உள்ளது) ,0-5-0

சௌந்தரியலகரி ஆநந்தலகரி—மூலமும், சைவ எல்லப்ப நாவல ரியற்றிய சிறந்த உரையும். 0-6-0

மாதரொழுக்க இலக்கணம்—ஸ்திரீகள் நடந்து கொள்ள வேண்டிய முறைகள் முதலிய அடங்கியது. 0-2-0

## வேதாந்தசாஸ்திர ரத்நாவலி- (பாக்கெட் சைஸ்.)

இதில் நாகாஜீவ வாதக்கட்டளை, கீதாசாரத் தாலாட்டு, சசி வன்னபோதம், மஹாராஜா துறவு, வைராக்ய சதகம், வைராக்கியதீபம், இவக்ஷுஞ விர்த்தி, வேதாந்தசூடாமணி, கைவல்ய நவநீதம் ஆக ஒன்பது புத்தகங்க ளடங்கி யிருக்கின்றன. இது ராயல் 32 பேஜில் 50 பவுண்டு கிளேஸ் கடிதத்தி லச்சிடப் பட்டிருக்கின்றது. நுபாய் ஒன்று.

## மெய்ஞ்ஞான போதம்.

இது சென்னை, கோமளேசுவரன் பேட்டையில் சோம வாரந்தோறும் பிரசுரமாகும் லோகோபகாரி பத்திரிகையின், (1911-வது வருடத்து) முதற்பக்கத்தில் வெளிவந்த வேதாந்த விஷயங்கள் அடங்கிய புத்தகம்; இதில் உபசாந்தத்திற் சேது வான ஆத்மாநாத்ம விவேகத்தையுண்டாக்குவதற்குப் பரமசாதன மாக 51 வேதாந்த உபந்நியாசங்க ளடங்கியிருக்கின்றன. 0-12-0

## வேதாந்த டிண்டிமம்-(வேதாந்தப்பேரிகை).

இது சம்ஸ்கிருதத்திலிருந்து கோவிலூர் ஸ்ரீ சுப்பய்ய சுவாமிகளால் மூலஞ்செய்யுள் வடிவமாயும் அதை விளக்கத் தெளிவான உரையு மியற்றப்பட்டிருக்கின்றது; வேதாந்த அப்பியாசிகள் ஒவ்வொருவரிடத்தும் அவசிய மிருத்தற்குரியதாம். விலை அணு நான்கு.

## மகாராஜா துறவு - வசனம் செய்யுளுடன்.

லோகோபகாரி பத்திராதிபர் ஸ்ரீமத் - கோ. வடிவேலு செட்டியாரவர்களா லியற்றப்பட்டது. 0- 3- 0

## மநநமாலை.

இதில் சொரூபாநந்தர் அருளிச்செயத சொரூபசாரம் ஸ்ரீசதாசிவப் பிரஹ்மேந்திரர் அருளிச்செய்த அத்வைத ரசமஞ் சரி-ஆத்மவித்தியா விலாசம், தத்துவராய சுவாமிகளருளிச் செய்த சசிவன்னபோதம் அடங்கியிருக்கின்றன. 0-2-0

## பிரஹ்மானந்த லஹரி.

ஸ்ரீ சங்கரபூஜ்ய பகவத் பாதாச்சாரிய சுவாமிகளவர்களால் இயற்றப்பட்ட இது மூலசுலோகம் கிரந்தத்திலும், பதச்சேதம், பதார்த்தம், பொழிப்புரைகளுடன் கோவிலூர் ஸ்ரீ ராமகிரு ஷ்ண சுவாமிகளவர்களா லியற்றப்பட்டுள்ளது. 0-1-0

| | | |
|---|---|---|
| பெருந்திரட்டு- குறுந்திரட்டுடன் | ரூ. | 3-0-0 |
| கைவல்ய நவநீதம் (பாக்கெட்) | | 0-3-0 |
| வேதாந்த சூளாமணி (பாக்கெட்) | | 0-2-0 |
| விவேகசூடாமணி (பாக்கெட்) | | 0-8-0 |
| ரிபுகீதைத்திரட்டு (குறிப்புரையுடன்) | | 1-0-0 |

| | அணா. | | அணா |
|---|---|---|---|
| நைஷ்கர்மியசித்தி | 8 | ஜெயலட்சுமி | 8 |
| வியாசதாத்பர்ய நிர்ணயம் | 8 | கமலாபாய் | 2 |
| அறிவானந்த சித்தியார் | 4 | மீனாட்சிசுந்தரம் | 12 |
| சிந்தாந்தபிந்து | 8 | ராமோதந்தம் | 2 |
| வேதாந்த பரிபாஷை | 10 | பாகவதத்திரட்டு | 6 |
| ராஜயோக பாஷ்யம் | 4 | சர்வதர்சனசங்கிரகம் ரூ. | 2-[illegible] |
| கிருஷ்ணவேணி | 12 | வேதாந்த சாராம்ருதம் | 6 |
| கல்யாணி | 8 | பாட்டியற்கொத்து | 6 |